உ

ஓம் குமர குருதாச குருப்யோ நம :
திருச்சிற்றம்பலம்

பாம்பன்
ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்
இயற்றியருளிய

# சண்முக கவசம்

(மூலமும் உரையும்)

நூல் வெளியீடு
ஓம் சரவணபவ பெனிபிட் பண்டு லிட்.,
சென்னை

உரையாசிரியர் :
சித்தாந்தச் செல்வர்
பேராசிரியர் டாக்டர் ப. இராமன் எம்.ஏ, பிஎச்.டி.,



பாம்பன் ஸ்ரீமத் குமர குருதாச ஸ்வாமிகள்

உ

ஓம் குமர குருதாச குருப்யோநம :

திருச்சிற்றம்பலம்

பாம்பன்

ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்

இயற்றியருளிய

# சண்முக கவசம்

(மூலமும் உரையும்)

விலை ரூ.2.50

உரையாசிரியர் :
சித்தாந்தச் செல்வர்
பேராசிரியர் டாக்டர் ப. இராமன் எம்.ஏ; பிஎச்.டி.,
44, R.K. மடத்துச்சாலை, மயிலை
சென்னை – 600 004.
தொ.பே. எண்.4941666

## ஓம் குமர குருதாச குருப்யோ நம;

## திருச்சிற்றம்பலம்

இன்றைய உலகியல் வாழ்வில் பலதரப்பட்ட இன்னல்களும் – இடர்ப்பாடுகளும் தொடர்ந்துள்ளன. இந்நிலையில் நாம் அனைவரும் மன அமைதி பெற்று – பெருவாழ்வு வாழ விரும்புவது இயற்கைதானே.

இறையருள் பெற்று இன்புறுவதே மனிதப்பிறவியின் மாபெரும் பேறாகும்.

இப்பேற்றினை எல்லாரும் பெற்று உய்யத்தான் பிரதோஷ சிறப்பு– வெட்டவெளி தியானம், உற்றதும் உணர்ந்ததும் என்னும் மூன்று நூல்களை அன்பர்களுக்கு அளித்துப் பேரானந்தம் பெற்றோம்.

பிரதோஷசிறப்பு அன்பர்களின் ஆன்மா இன்பமுற இலவசமாகவே அளித்தோம்.

ஓங்காரநந்தா சாமிகளின் வெட்ட வெளி தியான நூலும் உற்றதும் உணர்ந்ததும் என்னும் நூலும் சிறப்பாக வெளிவர உதவியாக இருந்தோமே என்ற எண்ணத்தில் மகிழ்கிறோம்.

இவ்வாறு "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்னும் அருள்வாக்கிற்கு இணங்க நல்ல பணிகளை நாள்தோறும் செய்ய வேண்டுவது சரியன்றோ!

பாம்பன் ஸ்ரீமத் குமர குருதாச சாமிகள் இயற்றிய சண்முக கவசத்தை (மூலமும்) அடியார்கள் இல்லந்தோறும் இருந்திடச் செய்யவேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டது. அதனால் இந்நூலை அச்சிட்டு – மானிய விலைக்கு அளிக்க முருகப் பெருமாள் அருள் கூட்டிற்று.

சண்முக கவசத்தின் அரிய பெரிய அருள் நிலைகளை பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சாமிகளின் அன்புரையை இந்நூலில் படித்துப் பேரின்பம் பெறலாம்.

P.B. குரூப் ஆப் கம்பெனிஸ் ஆற்றிவரும் மக்கள் தொண்டினையும் – மகேசன் தொண்டினையும் அறிந்திராத அடியார்கள் இருக்கவே முடியாது.

பாம்பன் சாமிகள் அருளிய சண்முக கவசத்தை–சாமிகள் காட்டிய நெறியிலேயே படித்து–இவ்வுலக இன்பத்தை இனிதே–இப்போதே பெற்றிட அன்படியார் அனைவரையும் வேண்டிக் கொள்ளுகிறேன்.

பாம்பன் சாமிகள் அருளிய சண்முக கவசத்துக்கு மிக அழகிய கவசமாக (மூலமும் உரையும்) அடியார்கள் அனைவரும் மிகமிக எளிதில் புரிந்து கொள்ள உதவியாக ஆக்கித் தந்த அன்புடைப்பெரியார் பேராசிரியர் ப.இராமன் அவர்களுக்கு எங்களது நெஞ்சினிய நன்றியைக் கூற விழைகிறோம்.



அன்புடையன்,

**டாக்டர் பி.பாலசுப்பிரமணியன்** பி.எஸ்.சி

மூத்த அறங்காவலர், கந்தகோட்டம்

சேர்மன், P.B.குரூப் ஆப் கம்பெனிஸ்

உ

ஓம் குமரகுருதாச குருப்யோ நம :

திருச்சிற்றம்பலம்

# முன்னுரை

அத்தியாச்சிரம சுத்தாத்துவித வைதிக சைவ சித்தாந்த ஞானபானு பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் அறுமுகன் ஒருவனுக்கே அடிமை பூண்டு அப்பெருமானது திருப்புகழை 6666 திருப்பாடல்களால் பாடிப் பரவியவர்கள். சுவாமிகள் பாடியருளிய திருப்பாடல்களுள் முருகன் அடியார்களால் சண்முக கவசம் நாள்தோறும் பாராயணம் செய்யப்படுவதாகும். இதனைத் திருத்தேவை என்னும் திருவிராமேச்சுரத்தில் இருக்கும்போது தமக்கோர் அல்லல் ஏற்பட்டதாகவும் அதனைத் தீர்க்க வேண்டிச் சண்முக கவசம் பாடியருளியதாகவும் சுவாமிகள் சரித்திரத்தில் கூறப்படுகின்றது. சண்முகனே எக்காலத்தும் எவ்விடத்தும் உயிருக்கும் உடம்புக்கும் கவசம் ஆவான் எனத் தம் அனுபவத்தால் உணர்ந்து சுவாமிகள் அருளிச் செய்த இக்கவசம் மகாமந்திரமாகும்.

தமிழில் உயிர் எழுத்துக்கள் 12; மெய்யெழுத்துக்கள் 18; இரண்டையும் கூட்டினால் மொத்தம் 30 எழுத்துக்கள். இந்த முப்பதுக்குள் தமிழ் அடங்கியுள்ளது. சுவாமிகளும் அகர முதல் ஔகாரம் முடிய 12 உயிர் எழுத்துக்களையும் அதனை அடுத்து ககார முதல் னகாரம் முடிய 18 உயிர் மெய்யெழுத்துக்களையும் ஒவ்வொரு பாடலிலும் முதல் எழுத்தாக அமைத்துப் பாடியருளி யுள்ளார்கள். ஆகையால் சண்முக கவசத்தில் தமிழ் முழுவதும் அடங்கிவிட்டது எனலாம். அகரத்தில் தொடங்கி னகரத்தில் முடித்தல் தனிச்சிறப்பாகும். இதற்குத் திருக்குறள் தக்க சான்றாகும்.

அறுமுகப் பெருமானைப் பரவுவதால் 30 திருப்பாடல்களையும் அறுசீர் விருத்தமாகவே அமைத்துள்ளார்கள் போலும்! சங்கத்

தமிழ்ப்புலவர்கட்குத்தலைவனான முருகவேளின் திருவுள்ளம் உவக்கும்படி முப்பது மணம் கமழ் மலர்களால் தொடுத்த இக்கவசமெனும் பாமாலையை அணிவித்துள்ளார்கள். முத்தமிழால் வைதாரையும் வாழவைக்கும் பெருமான் அழகிய மணமிகு புகழ்மாலையைத் தமிழால் ஆக்கிச் சூட்டுவாரை மிகப்பெருமையுடன் வாழவைப்பானன்றோ?

சண்முக கவசத்தை ஒவ்வொரு நாளும் ஆறுமுறை மன ஒருமையுடனும் ஆழ்ந்த பக்தியுடனும் ஓதிவந்தால் நன்மைகள் தாமே வந்து சேரும். நாம் தேடி அலைய வேண்டியதில்லை. முப்பத்தாறு முறை பாராயணம் செய்தால் முருகவேள், "அஞ்சேல் !" என்று அபயம் அளித்துத் திருக்காட்சியளித்து வேண்டிய வரமெலாம் வழங்கி அருளுவன். அடியேன் இருமுறை என் புதல்வன் சிரஞ்சீவி வெங்கடேசனுடன் சென்று திருச்செந்தூர் சுப்பிரமணியர் திருக்கோவிலில் அமர்ந்து 36 முறை சண்முக கவசம் ஓதினேன். அடியேன் விரும்பியதை உடனே நிறைவேற்றியருளினன். அடியேனுக்கு ஏற்பட்ட அனுபவம் போல் பல்லாயிரம், பல லட்சம் அடியார்களுக்கு அனுபவங்கள் ஏற்பட்டுள்ளன. தமிழகத்தில் மட்டுமின்றி, மலேசியா, சிங்கப்பூர் போன்ற வெளி நாடுகளில் வாழும் முருகன் அடியார்கள் அற்புத அனுபவங்கள் பெற்றுச் சண்முக கவசம் ஓதியும் சுவாமிகளை வழிபட்டும் வருகின்றார்கள்.

பாராயணம் செய்யும் பாடல்களின் பொருளைத் தெளிவாக உணர்ந்து கொள்வது நல்லது. உச்சரிப்பும் சரியாக அமைதல் வேண்டும். பொருள் விளங்கிவிட்டால் உச்சரிப்பை நன்கு செய்ய இயலும். அடியார்கள் பொருள் உணர்ந்து நன்கு உச்சரித்து உள்ளம் உருகி ஓதவேண்டும் எனும் அவாவினால் அடியேன் சண்முககவசத்திற்குத் தெளிவுரை எழுதினேன்.

அடக்கம், அன்பு, அறிவுத்திறம், செயல்திறம், அறுமுகனிடம் அளவிலாப்பக்தி, கந்தகோட்டத் தொண்டில் தன்னை அர்ப்பணித்தல், சமுதாயம் முன்னேற நிதிநிறுவனங்கள், கல்விநிலையங்கள் அமைத்தல் முதலிய அனைத்தும் நிறைந்த உயர்பண்பாளர்

பெருமதிப்பிற்குரிய பி. பாலசுப்பிமணியம் B.Sc, அவர்கள் கந்தகோட்டத்தின் அறங்காவலர் குழுவின் தலைவராக இருந்து அரிய திருப்பணிகள் செய்து வருகிறார்கள். பாம்பன் சுவாமிகளிடம் பக்தி கொண்டவர்கள். இவர்கள்தான் சண்முக கவச உரைநூலை வெளியிடவேண்டும், முருகனடியார்களுக்கு மிகவும் பயன்படும் என்றார்கள். இந்த உரைநூல் **P.B.** குரூப் ஆப் கம்பெனிஸ் வெளியீடாக வருவதை அடியேன் பெரும்பேறாகக் கருதுகிறேன். பெருமதிப்பிற்குரிய சான்றோர் பாலசுப்பிரமணியம் அவர்கட்கு அடியேன் என்றும் நன்றி காட்டுவேன்.

–அன்பன்

ப. இராமன்

## சண்முக கவச
## பாராயண முறை

**க**வசச் செய்யுள்களுள் சிலவற்றை விட்டுச் சிலவற்றைக்கூறலும், இடையில் எவரோடேனும் பேசலும் கூடாது; முன்பின் மாறிப்படித்தலும் ஆகாது; மந்திரமாறுபாடுபோல விபரீதமாகலின். ஆகூழ் அணையாப் போகு ஊழ், அறம் தழுவா மறம், அழுக்காறு, பக்தி ஈனம் என்பன உடையார்க்கு இக்கவசம் கிடைத்தலும், அனுட்டித்தலும், உரிய பலன் பெறலும் எண்மை ஆமோ?

– பாம்பன் ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகள்

**பாராயணத்தால் பாம்பு விடம் நீங்கிய அற்புதம் :**

"சிதம்பரம் வண்டிக்காரர் தெருவில் வசிக்கும் 40 வயதுடைய செல்வத்தம்மாளின் வலக்கணைக் காலிலே குரோதன வருடம் புரட்டாசி மாதம் 10–ஆம் தேதி மாலையில் பாம்பு கடித்தது. அதனால் அந்த அம்மாளுக்கு நெஞ்சடைப்பும் மூர்ச்சையும் ஏற்பட்டவுடன் இக்கவச பாராயணம் நிகழ்ந்தது.

– பாம்பன் ஸ்ரீமத் சுவாமிகள்

# சண்முக கவசம்

## அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

அண்டமா யவனி யாகி யறியொணாப் பொருள தாகித்
தொண்டர்கள் குருவு மாகித் துகளறு தெய்வ மாகி
எண்டிசை போற்ற நின்ற வென்னரு ளீசனான
திண்டிறற் சரவ ணத்தான் றினமுமென் சிரசைக் காக்க. 1

ஆதியாங் கயிலைச் செல்வ னணிநெற்றி தன்னைக் காக்க
தாதவிழ் கடப்பந் தாரான் றானிரு நுதலைக் காக்க
சோதியாந் தணிகை யீசன் றுரிசிலா விழியைக் காக்க
நாதனாங் கார்த்தி கேய னாசியை நயந்து காக்க. 2

இருசெவி களையுஞ் செவ்வே ளியல்புடன் காக்க வாயை
முருகவேள் காக்க நாப்பன் முழுதுநற் குமரன் காக்க
துரிசறு கதுப்பை யானைத் துண்டனார் துணைவன் காக்க
திருவுடன் பிடரிதன்னைச் சிவசுப்ரமணியன் காக்க. 3

ஈசனாம் வாகு லேய னெனதுகந் தரத்தைக் காக்க
தேசுறு தோள்வி லாவுந் திருமகண் மருகன் காக்க
ஆசிலா மார்பை யீரா றாயுதன் காக்க வென்றன்
ஏசிலா முழங்கை தன்னை யெழிற் குறிஞ் சிக்கோன் காக்க. 4

உறுதியாய் முன்கை தன்னை யுமையிள மதலை காக்க
தறுகணே றிடவேயென்கைத் தலத்தைமா முருகன் காக்க
புறங்கையை யயிலோன் காக்க பொறிக்கர விரல்கள் பத்தும்
பிறங்குமான் மருகன் காக்க பின்முது கைச்சேய் காக்க. 5

*ஊணிறை வயிற்றை மஞ்ஞை யூர்தியோன் காக்க வம்புத்
தோணிமிர்சுரேச னுந்திச் சுழியினைக் காக்க குய்ய
நாணினை யங்கி கௌரி நந்தனன் காக்க பீஜ
ஆணியைக் கந்தன் காக்க வறுமுகன் குதத்தைக் காக்க.* 6

*எஞ்சிடா திடுப்பை வேலுக் கிறைவனார் காக்க காக்க
அஞ்சக னமொரி ரண்டு மரன்மகன் காக்க காக்க
விஞ்சிடு பொருட்காங் கேயன் விளரடித்தொடையைக் காக்க
செஞ்சர ணேச வாசான் றிமிருமுன் றொடையைக் காக்க.* 7

*ஏரகத் தேவ னென்றா ளிருமுழங் காலுங் காக்க
சீருடைக் கணைக்கா றன்னைச் சீரலை வாய்த்தே காக்க
நேருடைப் பரடி ரண்டு நிகழ்பரங் கிரியன் காக்க
சீரிய குதிக்கா றன்னைத் திருச்சோலை மலையன் காக்க.* 8

*ஐயுறு மலையன் பாதத் தமர்பத்து விரலுங் காக்க
பையுறு பழநி நாத பரனகங் காலைக் காக்க
மெய்யுடன் முழுது மாதி விமலசண் முகவன் காக்க
தெய்வநா யகவி சாகன் றினமுமென் னெஞ்சைக் காக்க.* 9

*ஒலியெழ வுரத்த சத்தத் தொடுவரு பூதப் ரேதம்
பலிகொளி ராக்க தப்பேய் பலகணத் தெவையா னாலுங்
கிலிகொள வெனைவேல் காக்க கெடுபரர் செய்யுஞ் சூன்யம்
வலியுள மந்த்ர தந்த்ரம் வருத்திடா தயில்வேல் காக்க.* 10

*ஓங்கிய சீற்ற மேகொண் டுவணிவில் வேல்சூ லங்கள்
தாங்கிய தண்ட மெஃகந் தடிபர சீட்டி யாதி
பாங்குடை யாயுதங்கள் பகைவரென் மேலே யோச்சின்
தீங்குசெய் யாம லென்னைத் திருக்கைவேல் காக்க காக்க.* 11

*ஔவிய முளரூ ணுண்போ ரசடர்பே யரக்கர் புல்லர்
தெவ்வர்க ளெவரா னாலுந் திடமுட னெனைமற் கட்டத்
தவ்வியே வருவா ராயிற் சராசர மெலாம்பு ரக்குங்
கவ்வுடைச் சூர சண்டன் கையயில் காக்க காக்க.* 12

கடுவிடப் பாந்தள் சிங்கங் கரடிநாய் புலிமா யானை
கொடியகோ ணாய்கு ரங்கு கோலமார்ச் சாலஞ் சம்பு
நடையுடை யெதனா லேனு நானிடர்ப் பட்டி டாமற்
சடிதியில் வடிவேல் காக்க சானவி முனைவேல் காக்க. 13

ஙகரமே போற்ற ஸ்ரீஇ ஞானவேல் காக்க வன்புள்
சிகரிதே ணண்டுக் காலி செய்யனே றாலப் பல்லி
நகமுடை யோந்தி பூரா னளிவண்டு புலியின் பூச்சி
உகமிசை யிவையா லெற்கோ ரூறிலா தைவேல் காக்க. 14

சலத்திலுய் வன்மீ னேறு தண்டுடைத் திருக்கை மற்றும்
நிலத்திலுஞ் சலத்தி லுந்தா னெடுந்துயர் தரற்கே யுள்ள
குலத்தினா னான்வ ருத்தங் கொண்டிடா தவ்வவ் வேளை
பலத்துட னிருந்து காக்க பாவகி கூர்வேல் காக்க. 15

ஞமலியம் பரியன் கைவே னவக்கிர கக்கோள் காக்க
சுமவிழி நோய்க டந்த சூலையாக் கிராண ரோகம்
திமிர்கழல் வாதஞ் சோகை சிரமடி கர்ண ரோகம்
எமையணு காம லேபன் னிருபுயன் சயவேல் காக்க. 16

டமருகத் தடிபோ னைக்குந் தலையிடி கண்ட மாலை
குமுறுவிப் புருதி குன்மங் குடல்வலி யீழை காசம்
நிமிரொணா திருத்தும் வெட்டை நீர்ப்பிர மேக மெல்வாம்
எமையடை யாம லேகுன் றெறிந்தவன் கைவேல் காக்க. 17

இணக்கமில் லாதபித்த வெரிவுமா சுரங்கள் கைகால்
முணக்கவே குறைக்குங் குஷ்ட மூலவெண் முளைதீ மந்தம்
சணத்திலே கொல்லுஞ்சன்னி சாலமென் றறையு மிந்தப்
பிணிக்குல மெனையா ளாமற் பெருஞ்சத்தி வடிவேல் காக்க. 18

தவனமா ரோகம் வாதஞ் சயித்திய மரோச கம்மெய்
சுவறவே செய்யு மூலச் சூடினைப் புடற்று விக்கல்
அவதிசெய் பேதி சீழ்நோ யண்டவா தங்கள் சூலை
எவையுமென் னிடத்தெய் தாம லெம்பிரான் றிணிவேல் காக்க. 19

நமைப்புறு கிரந்தி வீக்க நணுகிடு பாண்டு சோபம்
அமர்த்திடு கருமை வெண்மை யாகுபஃறொ முநோய் கக்கல்
இமைக்குமுன் னுறுவ லிப்போ டெழுபுடைப் பகந்த ராதி
இமைப்பொழு தேனுமென்னை யெய்தாம லருள்வேல் காக்க. 20

பல்லது கடித்து மீசை படபடென் றேது டிக்கக்
கல்லினும் வலிய நெஞ்சங் காட்டியே யுருட்டி நோக்கி
எல்லினுங் கரிய மேனி யெமபடர் வரினு மென்னை
ஒல்லையிற் றார காரி ஓம்ஐம் ரீம்வேல் காக்க. 21

மண்ணிலு மரத்தின் மீது மலையிலு நெருப்பின் மீதும்
தண்ணிறை ஜலத்தின் மீதுஞ் சாரிசெய் யூர்திமீதும்
விண்ணிலும் பிலத்தி னுள்ளும் வேறெந்த விடத்து மென்னை
நண்ணிவந் தருளார் சஷ்டி நாதன்வேல் காக்க. 22

யகரமே போற்சூ லேந்து நறும்புயன் வேன்முன் காக்க
அகரமே முதலா மீரா றம்பகன் வேல்பின் காக்க
சகரமோ டாறு மானோன் றன்கைவே னடுவிற் காக்க
சிகரமின் றேவ மோலி திகழைவேல் கீழ்மேல் காக்க. 23

ரஞ்சித மொழிதே வானை நாயகன் வள்ளி பங்கன்
செஞ்சய வேல்கி ழக்கிற் றிடமுடன் காக்க வங்கி
விஞ்சிடு திசையின் ஞான வீரன்வேல் காக்க தெற்கில்
எஞ்சிடாக் கதிர்கா மத்தோ னிகலுடைக் கரவேல் காக்க. 24

லகரமே போற்கா ளிங்க னல்லுட னெளிய நின்று
தகரமர்த் தனமே செய்த சங்கரி மருகன் கைவேல்
நிகழெனை நிருதி திக்கி னிலைபெறக் காக்க மேற்கில்
இகலயில் காக்க வாயு வினிற்குகன் கதிர்வேல் காக்க. 25

வடதிசை தன்னி லீசன் மகனருட் டிருவேல் காக்க
விடையுடை யீசன் றிக்கில் வேதபோ தகன்வேல் காக்க
நடக்கையி லிருக்கு ஞான்று நவில்கையி னிமிர்கை யிற்கீழ்க்
கிடக்கையிற் றூங்கு ஞான்று கிரிதுளைத் துளவேல் காக்க. 26

இழந்துபோ காத வாழ்வை யீயுமுத் தையனார் கைவேல்
வழங்குநல் லூணுண் போது மால்விளை யாட்டின் போதும்
பழஞ்சுரர் போற்றும் பாதம் பணிந்துநெஞ் சடக்கும் போதுஞ்
செழுங்குணத் தோடே காக்க திடமுடன் மயிலுங் காக்க. 27

இளமையில் வாலி பத்தி லேறிடு வயோதி கத்தில்
வளரறு முகச்சி வன்றான் வந்தெனைக் காக்க காக்க
ஒளியெழு காலை முன்னெ லோஞ்சிவ சாமி காக்க
தெளிநடு பிற்ப கற்கால் சிவகுரு நாதன் காக்க. 28

இறகுடைக் கோழித் தோகைக் கிறைமுனி ராவிற் காக்க
திறலுடைச் சூர்ப்ப கைத்தே திகழ்பினி ராவிற் காக்க
நறவுசேர் தாட்சி லம்ப னடுநிசி தன்னிற் காக்க
மறைதொழு குழக னெங்கோன் மாறாது காக்க காக்க. 29

இனமெனத் தொண்ட ரோடு மிணக்கிடுஞ் செட்டி காக்க
தனிமையிற் கூட்டந் தன்னிற் சரவண பவனார் காக்க
நனியனு பூதி சொன்ன நாதர்கோன் காக்க வித்தைக்
கனிவொடு சொன்ன தாசன் கடவுடான் காக்க வந்தே. 30

சண்முக கவசம் முற்றிற்று.

பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் திருவடி வாழ்க!

உ

ஓம் குமர குருதாச குருப்யோ நம :

# சண்முக கவசம்

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

*அண்டமா அவனி யாகி யறியொணாப் பொருள தாகித்*
*தொண்டர்கள் குருவு மாகித் துகளறு தெய்வ மாகி*
*எண்டிசை போற்ற நின்ற வென்னரு ளீசனான*
*திண்டிறற் சரவணத்தான் றினமுமென் சிரசைக் காக்க.* 1

### பதவுரை :

அண்டமாய்–ஆகாயம் முதலிய எல்லா அண்டங்களுமாய்; அவனி ஆகி – பூமியாய்; அறியொணா – அறிய முடியாத; பொருளது ஆகி – பொருளாய்; தொண்டர்கள் – அடியார்கள்; குருவும் ஆகி ஆசிரியனாய்; துகள் அறு – குற்றம் அற்ற; தெய்வம் ஆகி – தெய்வமாய்; எண்திசை – எட்டுத் திசைகளிலும் உள்ளவர்கள்; போற்ற – தொழும்படி; நின்ற – எழுந்தருளிய; என் அருள் – எனக்கு அருளை வழங்கும்; ஈசன் ஆன – ஈசன் ஆகிய; திண்திறல் – உறுதியான வெற்றியையுடைய; சரவணத்தான் – சரவணப் பொய்கையில் பிறந்தவன் ; தினமும் – நாள்தோறும்; என் சிரசை – எனது தலையை; காக்க – காத்தருள்வானாக.

### கருத்துரை :

ஆகாயம் முதலிய எண்ண முடியாத எல்லா அண்டங்களுமாய், பூமியாய், ஞானாசிரியனாய் ஒளிவடிவான தெய்வமாய் இவ்வாறு காணக்கூடிய தூல வடிவத்திலும், இன்ன தன்மையன் என்று அறிந்து கொள்ள முடியாத சூக்கும வடிவத்திலும் தோன்றும் ஈசன் முருகன் ஆவான். எனக்கு அருளை வழங்கும் ஈசனான சரவணப் பொய்கையில் பிறந்தவன் நாள்தோறும் எனது தலையைக் காத்தருள்வானாக.

எல்லாப் பொருளுக்கும் தலைமைப் பொருளான சரவணபவன் 'எண்சான் உடம்பிற்குச் சிரசே பிரதானம்' என்றபடி உள்ள தலைமையான உறுப்பான தலையைக் காக்க வேண்டிச் சுவாமிகள் முதலில் விண்ணப்பித்துள்ள அருமையை நினைமின்.

சிரசின் உச்சியே சகஸ்ராரம் 7–வது ஆதாரம் 1008 இதழ் தாமரை.

*ஆதியாங் கயிலைச் செல்வ னணிநெற்றி தன்னைக் காக்க*
*தாதவிழ் கடப்பந் தாரான் றானிரு நுதலைக் காக்க*
*சோதியாந் தணிகை யீசன் றுரிசிலா விழியைக் காக்க*
*நாதனாங் கார்த்தி கேய னாசியை நயந்து காக்க.* 2

## பதவுரை :

ஆதியாம்–மூலகாரணனான; கயிலை–கயிலைமலைக்கு; செல்வன்–உரியவன்; அணி–அழகிய; நெற்றி தன்னை; காக்க–காத்தருள்வானாக; தாது–தேன்; அவிழ்–சிந்தும்; கடப்பம்தாரான்–கடம்ப மாலையை மார்பில் அணிந்தவன்; தான் – தானும்; இரு நுதலை – இரு புருவங்களையும்; காக்க–காத்தருள்வானாக; சோதியாம்–ஒளிவடிவான; தணிகை–திருத்தணிகையில் எழுந்தருளியுள்ள; ஈசன்–ஈசுவரன்; துரிசு–குற்றம்; இலாத–இல்லாத; விழியை – இரு கண்களையும்; காக்க–காத்தருள்வானாக; நாதன் ஆம் – தலைவனாகும்; கார்த்திகேயன்–கார்த்திகேயன் எனும் பெயருடையவன்; நாசியை – மூக்கை; நயந்து – விருப்பத்துடன்; காக்க – காத்தருள்வானாக.

கயிலை – சிவபெருமான் எழுந்தருளியுள்ள அப்பிராகிருதக் கயிலை எனவாகும்.

## கருத்துரை :

மூலகாரணனான கயிலைமலைக்கு உரியவன் அழகிய நெற்றியைக் காத்தருள்வானாக. தேன் சிந்தும் கடம்பமாலையை மார்பில் அணிந்தவன், இரு புருவங்களையும் காத்தருள்வானாக. அருட்சோதி வடிவான திருத்தணிகை ஈசுவரன் குற்றமிலா விழிகளைக் காத்தருள்வானாக. எப்பொருளுக்கும் தலைவனான கார்த்திகேயன் மூக்கினை விருப்பத்துடன் காத்தருள்வானாக.

கார்த்திகை மாதர் அறுவர் பாலூட்டி வளர்த்தமையால் கார்த்தி கேயன் என்று பெயர் வந்தது.

இருநுதல் எனும் இரு புருவங்களின் நடுப்பகுதியே ஆக்ஞை 6–வது ஆதாரம் சீதாசிவம் மனோன்மணி 96 இதழ் தாமரை.

*இருசெவி களையுஞ் செவ்வே ளியல்புடன் காக்க வாயை*
*முருகவேள் காக்க நாப்பல் முழுதுநற் குமரன் காக்க*
*துரிசறு கதுப்பை யானைத் துண்டனார் துணைவன் காக்க*
*திருவுடன் பிடரி தன்னைச் சிவசுப்ர மணியன் காக்க.* 3

**பதவுரை :**

இரு செவிகளையும்–இரண்டு காதுகளையும்; செவ்வேள்–முருகன்; இயல்புடன்–செயல்படு முறையில்; காக்க–காத்தருள்வானாக; வாயை; முருகவேள் –முருகப்பெருமான்; காக்க–காத்தருள்வானாக; நா, பல்–நாக்கு, பற்கள்; முழுதும்–முழுவதையும்; நற்குமரன் – நல்ல குமரக்கடவுள்; காக்க–காத்தருள்வானாக; துரிசு அறு–குற்றமற்ற; கதுப்பை–கன்னத்தை; யானைத் துண்டனார்–யானைமுகப் பிள்ளையார்; துணைவன்–தம்பி; காக்க–காத்தருள்வானாக. திருவுடன்–அழகுடன்; பிடரிதன்னை–பின் கழுத்தை; சிவசுப்பிரமணியன் காக்க – சிவசுப்பிரமணியன் காத்தருள்வானாக.

'இரு செவிகளையும்' என்று இரண்டு சீர்களாகச் சுவாமிகள் செய்யுளுக்காக ஒரு சொல்லைப் பிரித்துள்ளார்கள். இதனைப் படிக்கும்போது இரண்டு சீர்களையும் சேர்த்து ஒரு சொல்லாகப் படிக்க வேண்டும். 'இரு செவி' என்றும் 'களையும்' என்றும் பிரித்துப் படிக்கக்கூடாது.

**கருத்துரை :**

இரு காதுகளையும் செவ்வேள் அவற்றின் இயல்பான தன்மை கெடாமல் காத்தருள்வானாக. வாயை முருகவேள் காத்தருள்வானாக. நாக்கு, பற்கள் முழுவதையும் நல்ல குமரன் காத்தருள்வானாக. குற்றமற்ற கன்னத்தை யானைமுகன் தம்பி காத்தருள்வானாக. அழகுடன் பின் கழுத்தைச் சிவசுப்பிரமணியன் காத்தருள்வானாக.

*ஈசனாம் வாகுலேய னெனதுகந் தரத்தைக் காக்க*
*தேசுறு தோள்வி லாவுந் திருமகண் மருகன் காக்க*
*ஆசிலா மார்பை யீரா றாயுதன் காக்கவென்றன்*
*ஏசிலா முழங்கை தன்னை யெழிற்குறிஞ் சிக்கோன் காக்க.* 4

## பதவுரை :

ஈசனாம்–எல்லாப் பொருளுக்கும் உடையவனாகிய; வாகுலேயன்–கார்த்திகை மகளிர் மகன்; எனது–என்னுடைய; கந்தரத்தை–கழுத்தை; காக்க–காத்தருள்வானாக; தேசுறு–வலிமையுடைய; தோள்விலாவும் – தோள்களையும் விலாவையும்; திருமகண் – இலக்குமியின்; மருகன் – மருமகன் (முருகன்); காக்க–காத்தருள்வானாக; ஆசுஇலா – குற்றமில்லாத; மார்பை–மார்பினை; இரு ஆறு – பன்னிரண்டு; ஆயுதன் – படைகளையுடையவன்; காக்க – காத்தருள்வானாக; எந்தன் – என்னுடைய; ஏசுஇலா – இகழ்ச்சி இல்லாத; முழங்கை தன்னை – முழங்கைகளை; எழில் – அழகுமிக்க; குறிஞ்சிக்கோன் – மலைக்கடவுள்; காக்க–காத்தருள்வானாக.

கந்தரம் – கழுத்து. நாவின் அடிப்பகுதியே விசுத்தி ஆதாரம் மகேஸ்வரன் மகேஸ்வரி 16 இதழ் தாமரை மார்பில் தான் அனாகத ஆதாரம் 12 இதழ் உருத்திரன் பார்வதி.

## கருத்துரை :

எல்லாப் பொருளுக்கும் உடையவனாகிய ஈசன் என்னும் கார்த்திகை மகளிர் மகன் எனது கழுத்தைக் காத்தருள்வானாக. ஒளியுடைய தோள்களையும் விலாக்களையும் இலக்குமியின் மருமகன் காத்தருள்வானாக. குற்றமில்லாத மார்பைப் பன்னிரு படைகளை உடையவன் காத்தருள்வானாக. எனது இகழ்ச்சியில்லாத முழங்கைகளை அழகுமிக்க குறிஞ்சிக் கடவுள் காத்தருள்வானாக.

ஆறுமுகனின் பன்னிரண்டு ஆயுதங்கள் –1 தோமரம் (எறியீட்டி), 2. துவசம், 3. பெரிய கத்தி, 4. வச்சிராயுதம், 5. அம்பு, 6. அங்குசம், 7. கண்டை, 8.கமலம் (தாமரை வடிவான படை), 9.கோதண்டம், 10. பிராசம் (ஈட்டி), 11. பரசு (மழு), 12. படைக்கல நாயகமான வேற்படை.

*உறுதியாய் முன்கை தன்னை யுமையிள மதலை காக்க*
*தறுகணே றிடவே யென்கைத் தலத்தைமா முருகன் காக்க*
*புறங்கையை யயிலோன் காக்க பொறிக்கர விரல்கள் பத்தும்*
*பிறங்குமான் மருகன் காக்க பின்முது கைச்சேய் காக்க.* 5

**பதவுரை :**

உறுதியாய்–உறுதியாக; முன்கை தன்னை–முன் கைகளை; உமை–உமையாளின்; இளமதலை–இளைய மகன்(குமரன்); காக்க–காத்தருள்வானாக; தறுகண்–வீரம்; ஏறிடவே–வளர்ந்திட; என்கைத் தலத்தை–என்னுடைய உள்ளங்கைகளை; மா முருகன்–பெரிய முருகன்; காக்க–காத்தருள்வானாக; புறங்கையை –புறங்கைகளை; அயிலோன்–வேலிறைவன்; காக்க–காத்தருள்வானாக; பொறிக்கர விரல்கள் பத்தும்–பொலிவுடைய கைகளின் விரல்கள் பத்தினையும்; பிறங்கு–விளங்குகின்ற; மால்மருகன்–திருமாலின் மருமகன்; காக்க–காத்தருள்வானாக; பின் முதுகை–பின்னுள்ள முதுகை; சேய்–(குழந்தை) முருகன்; காக்க–காத்தருள்வானாக.

**கருத்துரை;**

உமையாளின் இளைய மகனான முருகன் உறுதியாக முன் கைகளைக் காத்தருள்வானாக. வீரம் வளர்ந்திடுமாறு என்னுடைய உள்ளங்கைகளைப் பெரிய முருகன் காத்தருள்வானாக. வேலிறைவன் புறங்கைகளைக் காத்தருள்வானாக. பொலிவுடைய கைகளின் பத்து விரல்களையும் திகழ்கின்ற திருமாலின் மருமகன் காத்தருள்வானாக. பின்னுள்ள முதுகைச் சேயோன் கத்தருள்வானாக.

*ஊணிறை வயிற்றை மஞ்ஞை யூர்தியோன் காக்க வம்புத்*
*தோணிமிர் சுரேச னுந்திச் சுழியினைக் காக்க குய்ய*
*நாணினை யங்கி கௌரி நந்தனன் காக்க பீஜ*
*ஆணியைக் கந்தன் காக்க வறுமுகன் குதத்தைக் காக்க.* 6

### பதவுரை :

ஊண் நிறை–உணவு நிறையும்; வயிற்றை; மஞ்ஞை–மயில்; ஊர்தியோன்–வாகனன்; காக்க–காத்தருள்வானாக; வம்பு–மணமிக்க மலர்மாலை; தோள் நிமிர்–தோள்கள் உயர்ந்த; சுரேசன்–தேவர்களின் கடவுள்; உந்திச் சுழியினை–நாபிச் சுழியை; காக்க–காத்தருள்வானாக; குய்ய நாணினை–குறிகளின் நரம்புகளை; அங்கி–நெருப்பின்; கௌரி–கௌரி என்னும் பெயருடைய தேவிக்கு; நந்தனன்–மகன்; காக்க–காத்தருள்வானாக; பீஜ ஆணியை–பீஜத்தோடு தண்டினையும்; கந்தன்–கந்தவேள்; காக்க–காத்தருள்வானாக; அறுமுகன்–ஆறுமுகத்தோன்; குதத்தை–மல வாயிலை; காக்க–காத்தருள்வானாக.

### கருத்துரை :

உணவு நிறையும் வயிற்றை மயூரவாகனன் காத்தருள்வானாக. வாசனையுடைய மலர்மாலை அணியும் தோள்கள் நிமிர்ந்த தேவர் தம் தலைவன் நாபிச் சுழியைக் காத்தருள்வானாக. இரகசிய உறுப்புக்களின் நரம்புகளை அக்கினி மைந்தன் எனவும் கௌரி மைந்தன் எனவும் விளங்குபவன் காத்தருள்வானாக. பீஜங்களையும் தண்டையும் கந்தவேள் காத்தருள் வானாக. அறுமுகன் மலம் சொரியும் வாயிலைக் காத்தருள்வானாக.

உந்தியே மணிபூரக ஆதாரம். 10 இதழ். திருமால் திருமகள் குய்யமே சுவாதிட்டான ஆதாரம். 6 இதழ். பிரம்மா. சரஸ்வதி. குதமே மூலாதாரம். 6 இதழ் கணபதி குண்டலினி.

*எஞ்சிடா திடுப்பை வேலுக் கிறைவனார் காக்க காக்க*
*அஞ்சக னமொரி ரண்டு மரன்மகன் காக்க காக்க*
*விஞ்சிடு பொருட்காங் கேயன் விளரடித் தொடையைக் காக்க*
*செஞ்சரணேச வாசான் றிமிரு முன் றொடையைக் காக்க.* 7

### பதவுரை :

எஞ்சிடாது–குறைவில்லாமல்; இடுப்பை; வேலுக்கு–வேற்படைக்கு; இறைவனார்–தலைவர்; காக்க–காத்தருள்வானாக; அம்சகனம்–அழகிய

பிருஷ்டம்; ஓர் இரண்டும்–இரண்டனையும்; அரன்மகன்–சிவபெருமான் மகன்; காக்க–காத்தருள்வானாக; காக்க–காத்தருள்வானாக; விஞ்சிடு பொருள்–மேலான பொருளான; காங்கேயன்–கங்கையின் மைந்தன்; விளர் அடித்தொடையை –இருபிரிவான அடித்தொடைகளை; காக்க–காத்தருள்வானாக; செஞ்சரண்–சிவந்த திருவடிகளையுடைய; நேச ஆசான்–அன்புடைய ஆசிரியன்; திமிரும்–வலிய; முன் தொடையை–முன் தொடையின் முன் பகுதியை; காக்க–காத்தருள்வானாக.

### கருத்துரை :

வேற்படைக்குத் தலைவன் குறைவில்லாமல் இடுப்பைக் காத்தருள்வானாக. சிவகுமாரன் அழகிய பிட்டங்கள் இரண்டனையும் காத்தருள்வானாக. காங்கேயன் இரு பிரிவான அடித் தொடைகளைக் காத்தருள்வானாக. சிவந்த திருவடிகளையுடைய அன்புடைய ஆசிரியன் வலிமையான முன் தொடையைக் காத்தருள்வானாக.

*ஏரகத் தேவ னென்றா ளிருமுழங் காலுங் காக்க*
*சீருடைக் கணைக்கா றன்னைச் சீரலை வாய்த்தே காக்க*
*நேருடைப் பரடி ரண்டும் நிகழ்பரங் கிரியன் காக்க*
*சீரிய குதிக்கா றன்னைத் திருச்சோலை மலையன் காக்க.* 8

### பதவுரை :

ஏரகத் தேவன்–(திருவேரகம்) சுவாமிமலைத் தெய்வம்; என்தாள்–எனது அடிகள்; இரு முழங்கால்களையும்; காக்க–காத்தருள்வானாக; சீருடை–சிறப்புடைய; கணைக்கால் தன்னை–கணைக்கால்களை; சீரலைவாய்–(திருச்சீரலைவாய்) திருச்செந்தூர்; தே–தெய்வம்; காக்க–காத்தருள்வானாக; நேருடை–நேரான; பரடு–காற்கரண்டை (புறங்கால்); இரண்டும்–இரண்டனையும்; நிகழ்–விளங்கும்; பரங்கிரியன்–திருப்பரங்குன்றத்தோன்;

காக்க–காத்தருள்வானாக; சீரிய–சிறந்த; குதிக்கால் தன்னை–குதிக்கால்களை; திருச்சோலைமலையன்–அழகிய பழமுதிர் சோலைமலையன்; காக்க–காத்தருள்வானாக.

**கருத்துரை :**

சுவாமிமலைத் தேவன் எனது இரண்டு அடிகளையும் முழங்காலகளையும் காத்தருள்வானாக. சிறப்புடைய கணைக் கால்களைத் திருச்செந்தூர்த் தேவன் காத்தருள்வானாக. நேரான காற்கரண்டைகள் இரண்டனையும் திருப்பரங்குன்றத்தில் அமர்ந்துள்ளவன் காத்தருள்வானாக. சிறந்த குதிக்கால்களை அழகிய பழமுதிர்சோலை மலைகிழவோன் காத்தருள்வானாக.

இப்பாடலில் நான்கு படை வீடுகள் கூறப்படும் சிறப்பை அறிக.

*ஐயுறு மலையன் பாதத் தமர்பத்து விரலுங் காக்க*
*பையுறு பழநிநாத பரனகங் காலைக் காக்க*
*மெய்யுடன் முழுது மாதி விமலசண் முகவன் காக்க*
*தெய்வநா யகவி சாகன் றினமுமென் னெஞ்சைக் காக்க.* ௨

**பதவுரை :**

ஐஉறு–அழகுடைய; மலையன்–மலையில் எழுந்தருளியவன் (குன்றுதோறாடல் புரிபவன்); அமர்–பொருந்திய; பத்து விரலும்–பத்து விரல்களையும்; காக்க–காத்தருள்வானாக; பையுறு–பசுமையுடைய; பழநி நாதன்–பழநிமலைத் தலைவன்; பரன்–பரமன்; அகங் காலை–உள்ளங் கால்களை; காக்க–காத்தருள்வானாக; மெய்–மெய்யெனும்; உடல்–உடல் முழுவதும்; ஆதி–மூலகாரணன்; விமலன்–குற்றமற்றவன்; சண்முகவன்–அறுமுகன்; காக்க–காத்தருள்வானாக; தெய்வ நாயக–தெய்வங்களுக்கெல்லாம் தலைவனான; விசாகன்–விசாகன்; தினமும்–நாள்தோறும்; என் நெஞ்சை–எமது நெஞ்சத்தை; காக்க–காத்தருள்வானாக.

**கருத்துரை :**

அழகுடைய குன்றுதோறும் ஆடும் குமரன் பத்து விரல்களையும் காத்தருள்வானாக. பசுமையுடைய பழநிமலை நாதனான பரமன் உள்ளங்கால்களைக் காத்தருள்வானாக. மெய்யெனும் உடல் முழுதும் மூலகாரணனான குற்றமில்லாதவன் என்னும் ஆறுமுகன் காத்தருள்வானாக. தெய்வங்களுக்கெல்லாம் தலைவனான விசாகன் நாள்தோறும் எனது நெஞ்சத்தைக் காத்தருள்வானாக.

விசாகன்–விசாக நட்சத்திரத்தில் பிறந்தவன்; வி–பறவை; சாகன்–சஞ்சரிப்பவன். அதாவது மயில்வாகனன். சிவனுக்குரிய நாமங்களுள் ஒன்று.

– பாம்பன் சுவாமிகள்.

இப்பாடலில் மேலும் எஞ்சியுள்ள இரண்டு படைவீடுகள் கூறப்பட்டுள்ள நயத்தைக் காண்க.

*ஒலியெழ வுரத்த சத்தத் தொடுவரு பூதப் ரேதம்*
*பலிகொளி ராக்க தப்பேய் பலகணத் தெவையா னாலுங்*
*கிலிகொள வெனைவேல் காக்க கெடுபரர் செய்யுஞ் சூன்யம்*
*வலியுள மந்த்ர தந்த்ரம் வருத்திடா தயில்வேல் காக்க.* 10

**பதவுரை :**

ஒலிஎழ–ஓசை எழும்ப; உரத்த சத்தத்தொடு–பெரிய சத்தமிட்டு; வரு–வருகின்ற; பூதம்–பூதங்கள்; ப்ரேதம்–பேய்கள்; பலிகொள்–பலிகொள்ளுகின்ற; இராக்கதப் பேய்–இராட்சசப் பேய்கள்; பல–பலவாகிய; கணத்து–கூட்டத்தின்; எவையானாலும்–எவையாக இருந்தாலும்; கிலிகொள–அச்சம் கொள்ளும்படி; எனை–என்னை; வேல்–வேற்படை; காக்க–காத்தருள்க; கெடுபரர்–தீயவர்; செய்யும்–செய்கின்ற; சூன்யம்–சூனியம்; வலியுள–வலிமையுள்ள; மந்த்ரம்–மந்திரமும்; தந்த்ரம்–தந்திரமும்; வருத்திடாது–துன்புறுத்தாமல்; அயில்வேல்–கூரியவேற்படை; காக்க–காத்தருள்க;

## கருத்துரை:

ஓசை எங்கும் எழும்பப் பெரிய சத்தமிட்டு வருகின்ற பூதங்கள், ஒருவகைப் பேய்கள், பலி கொள்ளும் இராட்சசப் பேய்கள். இத்தகைய பலவான கூட்டங்களில் எவை எதிர்த்து வந்தாலும் அவை அச்சங்கொண்டு ஓடும்படி என்னை வேற்படை காத்தருள்க. தீயவர் செய்கின்ற சூனியமும்; வலிமையுள்ள மந்திரமும் தந்திரமும் துன்புறுத்திடாமல் கூரிய வேற்படை காத்தருள்க.

*ஓங்கிய சீற்ற மேகொண் டுவணிவில் வேல்சூ லங்கள்*
*தாங்கிய தண்ட மெஃகந் தடிபர சீட்டியாதி*
*பாங்குடை யாயுதங்கள் பகைவரென் மேலே யோச்சின்*
*தீங்குசெய் யாம லென்னைத் திருக்கைவேல் காக்க காக்க.* 11

## பதவுரை :

ஓங்கிய–மிகுந்த; சீற்றமே கொண்டு–கோபம் கொண்டு; உவணி–வாள்; வில்–விற்படை; வேல்–வேற்படை; சூலங்கள்–சூலம் முதலிய படைகள்; தாங்கிய–ஏந்திய; தண்டம்–கதை; எஃகம்–சக்கரம்; தடி; பரசு–கோடரி; ஈட்டி; ஆதி–முதலிய; பாங்குடை–கொல்லுந் தன்மையுடைய; ஆயுதங்கள்–ஆயுதங்களை; பகைவர்–பகைவர்கள்; என் மேலே– என் மீது; ஓச்சின்–வீசினால்; தீங்கு–தீமை; செய்யாமல்–செய்யாதபடி; என்னை–என்னை; திருக்கை வேல்–அழகிய கையில் ஏந்திய வேற்படை; காக்க–காத்தருள்க; காக்க–காத்தருள்க.

## கருத்துரை :

மிகுந்த கோபங்கொண்டு, வாள், வில், வேல், சூலம் முதலிய படைகளையும் ஏந்திய கதை, சக்கரம், தடி, கோடரி, ஈட்டி முதலிய கொல்லுந் தன்மையுடைய படைகளையும் பகைவர்கள் என்மேல் வீசினால், அவை எவ்விதத் தீமையும் செய்யாதபடி என்னைக் கந்தவேள் அழகிய கையில் பிடித்த படைக்கல நாயகமான வேற்படை காத்தருள்க.

*ஔவிய முளரு ணுண்போ ரசடர்பே யரக்கர் புல்லர்*
*தெவ்வர்க ளெவரா னாலுந் திடமுட னெனைமற் கட்டத்*
*தவ்வியே வருவா ராயிற் சராசர மெலாம்பு ரக்குங்*
*கவ்வுடைச் சூர சண்டன் கையயில் காக்க காக்க.* 12

## பதவுரை :

ஔவியம்–பொறாமை; உளர்–உள்ளவர்; ஊண்–புலால்; உண்போர்–உண்பவர்; அசடர்–மூடர்; பேய்–பேய்கள்; அரக்கர்–அரக்கர்கள்; புல்லர்–அற்பர்; தெவ்வர்–பகைவர்கள்; எவரானாலும்–(இவர்களுள்) எவராயிருந்தாலும்; திடமுடன்–ஊக்கத்தோடு; எனை–என்னை; மற்கட்ட–மற்போர் செய்ய; தவ்வியே–தாவியே; வருவாராயின்–வருவாரேயானால்; சராசரம்–அசையும் பொருள் அசையாப் பொருள்; எலாம்–எல்லாவற்றையும்; புரக்கும்–காக்கும்; கவ்வுடை–பெருமையுடைய; சூர சண்டன்–சூரனைக் கொன்றவன்; கைஅயில்–கையிலுள்ள வேற்படை; காக்க–காத்தருள்க; காக்க–காத்தருள்க.

## கருத்துரை;

பொறாமை உள்ளவர், புலால் உண்ணுவோர், மூடர், பேய்கள், அரக்கர், அற்பர், பகைவர் ஆகிய எவரானாலும் ஊக்கத்தோடு என்னுடன் மற்போர் செய்யத் தாவி வருவாரானால், அசையும் பொருள், அசையாப் பொருள் அனைத்தையும் காக்கும் பெருமையுடைய சூரனைக் கொன்றவன் கையிலுள்ள வேற்படை காத்தருள்க காத்தருள்க.

*கடுவிடப் பாந்தள் சிங்கங் கரடிநாய் புலிமா யானை*
*கொடியகோ ணாய்கு ரங்கு கோலமார்ச் சாலஞ் சம்பு*
*நடையுடை யெதனா லேனு நானிடர்ப் பட்டி டாமற்*
*சடிதியில் வ டிவேல் காக்க சானவி முளைவேல் காக்க* 13

பதவுரை :

கடு–மிக்க; விடம்–விஷம்; பாந்தள்–பாம்பு; சிங்கம்; கரடி; நாய்; புலி; மா–பெரிய; யானை; கோள்–வலிய; நாய்–ஓநாய்; குரங்கு; கோலம்–பன்றி; மார்ச்சாலம்–பூனை; சம்பு–நரி; நடையுடை–கால்நடையாகவுள்ள; எதனாலேனும்–வேறு எதனாலாயினும்; நான்; இடர்ப்பட்டிடாமல்–துன்பப் படாமல்; சடிதியில்–விரைவில்; வடிவேல்–வடித்தவேற்படை; காக்க–காத்தருள்க; சானவி–கங்கையின்; முளை–மகன்; வேல்–வேற்படை; காக்க–காத்தருள்க.

கருத்துரை;

மிகுந்த நஞ்சுடைய பாம்பு, சிங்கம், கரடி, புலி, நாய், பெரிய யானை, வலிய ஓநாய், குரங்கு, பன்றி, பூனை, நரி என்னும் இவைகளுடன் வேறு கால்நடையாகவுள்ளனவும் ஆகிய இவற்றுள் எந்த ஒன்றினாலும் நான் துன்பப்படாமல் விரைவில் வடிவேல் காத்தருள்க; கங்கை மைந்தனுடைய வேற்படை காத்தருள்க.

*ஙகரமே போற்ற ழீஇ ஞானவேல் காக்க வன்புள்*
*சிகரிதே ணண்டுக் காலி செய்யனே றாலப் பல்லி*
*நகமுடை யோந்தி பூரா னளிவண்டு புலியின் பூச்சி*
*உகமிசை யிவையா லெற்கோ ரூறிலா தைவேல் காக்க.* 14

பதவுரை :

ஙகரமே போல்–ஙகர எழுத்துப் போல; தழீஇ–தழுவி; ஞானவேல்–ஞானசத்தி என்னும் வேற்படை; காக்க–காத்தருள்க; வன்புள்–வலிய பறவை; சிகரி–எலி; தேள்; நண்டுக் காலி–நண்டுத்தெறுக்கால்; செய்யன்–செய்யான் (ஒருவகை விடப்பூச்சி) ஏறு ஆலப்பல்லி–விடமேறும் பல்லி; (ஆலம்–விடம்). நகமுடை–நகங்களுடைய; ஓந்தி–ஓணான்; பூரான்; நளி வண்டு – குளிர்ச்சி வண்டு; புலியின் பூச்சி–சிலந்தி; உகமிசை–இந்த உலகில்; இவையால்–இவற்றால்; எற்கோர்–எனக்கொரு; ஊறுஇலாது–துன்பம் இல்லாமல்; ஐவேல்–அழகிய வேற்படை; காக்க–காத்தருள்க.

**கருத்துரை :**

ஙகர எழுத்துப் பிற எழுத்தைத் தழுவிவருவதுபோல் என்னைத் தழுவி ஞானசத்தி என்னும் வேற்படை காத்தருள்க. வலிய பறவை, எலி, தேள், நண்டுத்தெறுக்கால், செய்யான், விடமுடைய பல்லி, நகமுடைய ஓணான், பூரான், குளிர்ச்சி நோய் தரும் வண்டு, சிலந்தி, ஆகிய இவற்றால் இவ்வுலகில் எனக்கு ஒரு துன்பமும் இல்லாமல் அழகிய வேற்படை காத்தருள்க.

*சலத்திலுய் வன்மீ னேறு தண்டுடைத் திருக்கை மற்றும்*
*நிலத்திலுஞ் சலத்தி லுந்தா னெடுந்துயர் தரற்கே யுள்ள*
*குலத்தினா னான்வ ருத்தங் கொண்டிடா தவ்வவ் வேளை*
*பலத்துட னிருந்து காக்க பாவகி கூர்வேல் காக்க.* 15

**பதவுரை :**

சலத்தில்–நீரில்; உய்–வாழுகின்ற; வன்மீன்–முதலை; ஏறு–சுறாமீன்; தண்டுடை–வளைதடி போன்ற வாலுள்ள; திருக்கை–திருக்கைமீன்; மற்றும்–பின்னும்; நில்த்திலும்–மண்மீதும்; சலத்திலும் தான்–நீரிலும்; நெடும்துயர்–பெருந்துன்பம்; தரற்கேயுள்ள–தருவதற்குள்ளனவாகிய; குலத்தினால்–கூட்டத்தினால்; நான் வருத்தம் கொண்டிடாது–நான் துன்பம் அடையாதபடி; அவ்வவ்வேளை–அந்தந்தப் பொழுதில்; பலத்துடன்–வலிமையுடன்; இருந்து; காக்க–காத்தருள்க; பாவகி–நெருப்பில் பிறந்த முருகன்; கூர்வேல்–கூரிய வேற்படை; காக்க–காத்தருள்க.

**கருத்துரை;**

நீரில் வாழும் முதலை, சுறாமீன், திருக்கைமீன் ஆகியவற்றாலும் இன்னும் நிலத்தின்மீதும் நீரினுள்ளும் பெருந்துன்பம் தரக்கூடிய கூட்டத்தினாலும், நான் துன்பம் அடையாதவாறு அந்தந்தப் பொழுதில் வலிமையுடனிருந்து காத்தருள்க. நெருப்பில் தோன்றிய முருகனின் கூரிய வேற்படை காத்தருள்க.

*ஞமலியம் பரியன் கைவே னவக்கிர கக்கோள் காக்க*
*சுமவிழி நோய்க டந்த சூலையாக் கிராண ரோகம்*
*திமிர்கழல் வாதஞ் சோகை சிரமடி கர்ண ரோகம்*
*எமையணு காம லேபன் னிருபுயன் சயவேல் காக்க.* 16

## பதவுரை :

ஞமலி–மயில்; அம்–அழகிய; பரியன்–வாகனமாக வுடையவன்; கைவேல்–கையிலுள்ள வேற்படை; நவக்கிரகம்–நவக்கிரகங்களால் ஏற்படும்; கோள்–குற்றங்களை; காக்க–காத்தருள்க; சுமம்–பூ; விழி நோய்கள்–கண் நோய்கள்; தந்தசூலை–பல்குத்தல்வலி; ஆக்கிராணரோகம்–மூக்குநோய்; திமிர்கழல் வாதம்–(கழல்–கால்) காலின் திமிர்வாதம்; சோகை–இரத்தக் குறைவால்வரும் நோய்; சிரம்அடி–தலையின் அடிப்பகுதியில் உள்ள; கர்ணரோகம்–காதுவலி; எமை–எம்மை; அணுகாமலே–அணுகாதபடி; பன்னிரு–பன்னிரண்டு; புயன்–தோள்களையுடையவன்; சயவேல்–வெற்றிவேல்; காக்க–காத்தருள்க.

## கருத்துரை :

அழகிய மயிலை வாகனமாகவுடையவன் கையிலுள்ள வேற்படை நவக்கிரகங்களினால் ஏற்படும் குற்றங்களை நீக்கிக் காத்தருள்க. பூ முதலிய கண் நோய்கள், பல்வலி, மூக்குநோய், காலின் திமிர்வாதம், சோகை, காதுவலி ஆகிய இவை எம்மை நெருங்காதபடி பன்னிரண்டு தோள்களையுடையவனது வெற்றி வேல் காத்தருள்க.

*டமருகத் தடிபோ னைக்குந் தலையிடி கண்ட மாலை*
*குமுறுவிப் புருதி குன்மங் குடல்வலி யீழை காசம்*
*நிமிரொணா திருத்தும் வெட்டை நீர்ப்பிர மேகமெல்லாம்*
*எமையடை யாம லேகுன் றெறிந்தவன் கைவேல் காக்க.* 17

**பதவுரை :**

டமருகத்து–உடுக்கையின்; அடிபோல்–அடியைப்போல; ('விண்விண்'என்று) நைக்கும்–வருத்தும்; தலையிடி–தலைவலி; கண்டமாலை–கழுத்தைச் சுற்றி மாலைபோல் வரும் கட்டிகள்; குமுறு–கிளர்ந்த; விப்புருதி–சிலந்திப்புண்; குன்மம்–வயிற்று நோய்; குடல்வலி–குடலில் ஏற்படும் வலி; ஈழை–கோழை நோய்; காசம்–எலும்புருக்கிநோய்; நிமிரொணாது–நிமிரமுடியாதபடி; இருந்தும்–இருக்கச் செய்யும்; வெட்டை–வெப்ப மிகுதியால் வரும் நோய்; நீர்ப்பிரமேகம்–பிரமேகநீர் நோய்; எல்லாம் – இந்நோய்கள் எல்லாம்; எமை அடையாமலே–எம்மை வந்து சேராமல்; குன்று–கிரௌஞ்ச மலையை; எறிந்தவன்–பிளந்தவன்; கைவேல்–கையிலுள்ள வேற்படை; காக்க–காத்தருள்க.

**கருத்துரை :**

உடுக்கையை மாறி மாறி அடித்தாற்போன்று தலையில் 'விண்விண்' என வருத்துகின்ற தலைவலி, கழுத்தைச் சுற்றி வரும் கட்டிகளான கண்டமாலை நோய், வீங்கித் தோன்றும் உதட்டுச் சிலந்தி, வயிற்றில்வரும் நோய், குடலில் வரும் நோய், கோழை நோய், எலும்புருக்கி நோய், நிமிர முடியாதபடி செய்யும் வெட்டை என்னும் கொடிய பால்வினை நோய், நீரிழியும் பிரமேகநீர் எனும் பால்வினை நோய் ஆகிய இவை எல்லாம் எம்மை அடையாமல் கிரௌஞ்ச மலையைப் பிளந்தவன் கையிலுள்ள வேற்படை காத்தருள்க.

*இணக்கமில் லாதபித்த யெரிவுமா சுரங்கள் கைகால்*
*முணக்கவே குறைக்குங் குஷ்டம் மூலவெண் முளைதீ மந்தம்*
*சணத்திலே கொல்லுஞ் சன்னி சாலமென் றறையு மிந்தப்*
*பிணிக்குல மெனையா ளாமற் பெருஞ்சத்தி வடிவேல் காக்க* 18

**பதவுரை :**

இணக்கம் இல்லாத–அடங்குதலில்லாத; பித்த எரிவு–பித்த எரிச்சல்; மா சுரங்கள்–கொடிய சுர நோய்கள்; கை கால்–கைகளையும் கால்களையும்;

முணக்கவே–முடங்கும்படி; குறைக்கும்–உறுப்புக் குறைசெய்யும்; குஷ்டம்–தொழுநோய்; மூலவெண்முளை–வெண்மூலமுளை; தீ மந்தம் (தீ–பசித்தீ) பசியின்மை; சணத்திலே–கணநேரத்தில்; கொல்லும்–கொல்லவல்ல; சன்னி–சன்னி; சாலம்–கூட்டம்; என்று அறையும்–என்று கூறப்படும்; இந்தப் பிணிக்குலம்–இந்த நோய் வகைகள்; எனை–என்னை; ஆளாமல்–அடிமை கொள்ளாமல்; பெருஞ்சத்தி வடிவேல்–பெரிய ஞானசத்தி என்னும் வடிவேல்; காக்க–காத்தருள்க.

## கருத்துரை:

அடங்காத பித்த எரிச்சல், கொடிய சுர வகைகள், கை கால்களை முடங்கும்படி உறுப்புக்குறை செய்யும் தொழுநோய், வெண்மூலமுளை, பசியின்மை, கணநேரத்தில் கொல்ல வல்ல சன்னி வகைகள் என்று கூறப்படுகின்ற இந்த நோய் வகைகள் என்னை அடிமைகொண்டு வருத்தாமல் பெரிய ஞானசத்தி என்னும் வடிவேல் காத்தருள்க.

சன்னி வகைகள் பதினெட்டு அவற்றுள் கொடியவை–அந்தகன், சீதாங்கம், கண்டகுச்சம், பொக்க நேத்திரம், அபினியாசம் முதலியன. இவற்றுள் மிகக் கொடியது பொக்க நேத்திரம் என்பது. இச்சன்னி கண்ட எட்டாவது நாளில் கொல்லும். சன்னியின் கொடுமையைக் கருதியே சுவாமிகள் 'க்ஷணத்திலே கொல்லும் சன்னி' என்றார்கள்.

*தவனமா ரோகம் வாதஞ் சயித்திய மரோச கம்மெய்*
*சுவறவே செய்யு மூலச் சூடிளைப் புடற்று விக்கல்*
*அவதிசெய் பேதி சீழ்நோ யண்டவா தங்கள் சூலை*
*எவையுமென் னிடத்தெய் தாமலெம்பிரான் றிணிவேல் காக்க 19*

## பதவுரை :

தவனம்–தாகம்; மா ரோகம்–பெருநோய்; வாதம்–வாத நோய்கள்; சயித்தியம்–(சைத்தியம்) சீதத்தன்மை; அரோசகம்–அருவருப்பு(உணவில் விருப்பின்மை); மெய்–உடம்பு; சுவறவே

செய்யும்–உலர்ந்து போகும்படி செய்யும்; மூலச்சூடு–மூலச்சூடு என்னும் நோய்; இளைப்பு உடற்று–இளைப்புத் துன்பம் செய்யும்; விக்கல்–விக்கல் நோய்; அவதி செய்–துன்பம் செய்யும்; பேதி சீழ் நோய்கள்; அண்ட வாதங்கள், சூலை முதலியன; எவையும் என்னிடத்து; எய்தாமல்–சேராமல்; எம்பிரான்–எம்மைப் பிரியாதவன்; திணிவேல்–திண்ணிய வேல்; காக்க–காத்தருள்க.

**கருத்துரை :**

அதிகத் தாகத்தை உண்டாக்கும் கொடிய நோய், வாத நோய்கள், குளிச்சியுண்டாக்கும் நோய், உணவில் வெறுப்புண்டாக்கும் நோய், உடம்பை ஈரப்பசையில்லாமல் உலரச் செய்யும் நோய், மூலச்சூடு, இளைப்புத் துன்பத்தைத்தரும் விக்கல் நோய், துன்பஞ் செய்யும் பேதி, சீழ், அண்டவாதங்கள், சூலை ஆகிய நோய்கள் எவையும் என்னிடத்துச் சேராமல் எம்மைப் பிரியாத முருகக்கடவுளின் திண்ணிய வேல் காத்தருள்க.

*நமைப்புறு கிரந்தி வீக்க நணுகிடு பாண்டு சோபம்*
*அமர்த்திடு கருமை வெண்மை யாகுபஃறொழுநோய் கக்கல்*
*இமைக்குமுன் னுறுவலிப்போ டெழுபுடைப் பகந்த ராதி*
*இமைப்பொழு தேனுமென்னை யெய்தாம லருள்வேல்காக்க* 20

**பதவுரை :**

நமைப்புஉறு–தினவுதரும்; கிரந்தி வீக்கம்–சொறித்தடிப்பு; நணுகிடு–சேர்ந்திடும், பாண்டு–பாண்டு எனும் ஒரு வகை வீக்க நோய்; சோபம்– சோர்வு; கருமை–கருங்குட்டம்; வெண்மை–வெண்குட்டம்; ஆகுபல்–ஆகிய பலவகை; தொழுநோய்–தொழுநோய்கள்; கக்கல்–வாந்தி; இமைக்கும் முன்–கண் இமைக்கும் நேரத்திற்குள்; உறுவலிப்போடு–மிக்க வலிமையுடன்; எழுபுடை–பக்கங்களில் வீங்கித் துன்பஞ் செய்யும்; பகந்தர்–பவுந்திரம்; ஆதி–முதலியன; இமைப் பொழுதேனும்–கண் இமைக்கும் பொழுதளவுகூட; என்னை எய்தாமல்–என்னைச் சேராமல்; அருள்வேல்–அருள்மிக்க வேற்படை; காக்க–காத்தருள்க.

## கருத்துரை :

ஓயாமல் நமைச்சலை உண்டாக்கும் பலவகைச் சொறித்தடிப்பு, வீக்கமுண்டாக்கும் பாண்டு, சோர்வைத்தரும் கருங்குட்டம், வெண்குட்டம் முதலிய தொழுநோய் வகைகள், வாந்தி, இமைப்பொழுதிற்குள் மிக்க வலியோடு பக்கங்களில் வீங்கித் துன்பம்தரும் பலவகைப் பவுந்திரங்கள், முதலியன இமைப்பொழுது அளவுகூட என்னைச் சேராமல் அருள்மிக்க வேல் காத்தருள்க.

பவுத்திரம் என்ற கொடிய நோய் அதிகப் போகத்தினால் வெப்பம் அதிகரித்து மேகநோய் உண்டாகி அதன்பின்பு அரித்து வீங்கிக் கொப்புளித்துச் சீழும் சலமும் வடியும். சுவாமிகள் இதனை 'எழுபுடைப் பகந்தர்' என்பது எத்துணை பொருத்தம்!

*பல்லது கடித்து மீசை படபடென் றேது டிக்கக்*
*கல்லினும் வலிய நெஞ்சங் காட்டியே யுருட்டி நோக்கி*
*எல்லினுங் கரிய மேனி யெமபடர் வரினு மென்னை*
*ஒல்லையிற் றார காரி ஓம்ஐம் ரீம்வேல் காக்க.* 21

## பதவுரை :

பல்லது–பற்களை; கடித்து; மீசை படபட என்றே துடிக்க; கல்லினும்–கல்லைக் காட்டினும்; வலிய நெஞ்சம்–வலிமையான நெஞ்சம்; காட்டியே–காட்டி; உருட்டி நோக்கி–கண்களை உருட்டிப்பார்த்து; எல்லினும்–இருளைக்காட்டினும்; கரிய மேனி–கரிய நிற உடம்பினையுடைய; எமபடர்–எமனுடைய தூதர்கள்; வரினும்– வந்தாலும்; என்னை; ஒல்லையில்–விரைவில்; தாரகாரி–தாரகாசுரனைக் கொன்றவன்; ஓம் ஐம் ரீம்– 'ஓம் ஐம் ரீம் எனும் மந்திர ரூபமான; வேல்–வேற்படை; காக்க–காத்தருள்க.

ஓம்–பரமாத்மரூபம். ஐம்–வாக்கு. ஹ்ரீம்–பூமி

**கருத்துரை :**

பற்களைக் கடித்து, மீசை படபட என்று துடிக்கக் கல்லைக் காட்டிலும் வலிமையான மார்பினைக் காட்டிக் கண்களை உருட்டிப் பார்த்து-இருளைக் காட்டிலும் கருநிறமுடைய எமன் தூதர்கள் வந்தாலும் என்னை விரைவில் தாரகாசுரனைக் கொன்றவனுடைய ஓம் ஐம் ரீம் எனும் மந்திர ரூபமான வேற்படை காத்தருள்க.

உயிரைக் கவருவதில் சிறிதும் தவறாத காலதூதர்கள் வரும்போது அவர்களிடமிருந்து காப்பாற்றத்தக்கது மகாமந்திர ரூபமான வேல் ஒன்றே. ஆகையால் 'ஓம் ஐம் ரீம் வேல் காக்க' என்று அழகுறப் பாடியருளியுள்ளார்கள் சுவாமிகள்.

*மண்ணிலு மரத்தின் மீது மலையிலு நெருப்பின் மீதும்*
*தண்ணிறை ஜலத்தின் மீதுஞ் சாரிசெய் யூர்தி மீதும்*
*விண்ணிலும் பிலத்தி னுள்ளும் வேறெந்த விடத்து மென்னை*
*நண்ணிவந் தருளார் சஷ்டி நாதன்வேல் காக்க காக்க.* 22

**பதவுரை :**

மண்ணிலும்-பூமியிலும்; மரத்தின்மீதும்-தாவரங்கள் மீதும்; மலையிலும்-மலையிடத்தும்; நெருப்பின்மீதும்-நெருப்பிலும்; தண்நிறை-குளிர்ச்சி நிறைந்த; ஜலத்திலும்-நீரிலும்; சாரிசெய்-ஏறிச் செலுத்தும்; ஊர்திமீதும்-வாகனத்திலும்; விண்ணிலும்-ஆகாயத்திலும்; பிலத்தின் உள்ளும்-பாதலத்துள்ளும்; வேறு எந்த இடத்தும்-வேறு எந்த இடத்திலும்; என்னை; நண்ணிவந்து-நெருங்கிவந்து; அருளார்-அருள் நிறைந்த; சஷ்டிநாதன்-சஷ்டிக்குத் தலைவன்; வேல்-வேற்படை; காக்க காக்க-காத்தருள்க, காத்தருள்க.

**கருத்துரை :**

பூமியிலும், தாவரங்களிடத்தும், மலையிடத்தும், நெருப்பிடத்தும், குளிர்ச்சி நிறைந்த நீரிடத்தும், ஏறிச் செலுத்தப்படும் வாகனத்திடத்தும், ஆகாயத்திலும், பாதலத்தினுள்ளும், மற்றுமுள்ள வேறு எந்த

இடத்திலும், என்னை நெருங்கிவந்து அருள் நிறைந்த சஷ்டிக்குத் தலைவனின் வேற்படை காத்தருள்க, காத்தருள்க.

*யகரமே போற்சூ லேந்து நறும்புயன் வேன்முன் காக்க*
*அகரமே முதலா மீர்ா றம்பகன் வேல்பின் காக்க*
*சகரமோ டாறு மானோன் றன்கைவே னடுவிற் காக்க*
*சிகரமின் றேவ மோலி திகழைவேல் கீழ்மேல் காக்க* 23

## பதவுரை :

யகரமே போல்–யகர எழுத்துப்போல முத்தலைச் சூலத்தை; ஏந்தும்–தாங்கியுள்ள; நறும்புயன்–மணங்கமழ் தோளான்; வேல்–வேற்படை; முன்–என் முன் இடத்தை; காக்க–காத்தருள்க. அகரமே முதலாம் ஈராறு–அகரத்தை முதலாகக் கொண்ட பன்னிரண்டு உயிர் எழுத்துக் களைப் போன்று; அம்பகன்–பன்னிரண்டு கண்களையுடையவன்; வேல்–வேற்படை; பின்–பின் இடத்தை; காக்க–காத்தருள்க; சகரமோடு–சகரத்துடன்; ஆறும் ஆனோன்–திருவாறெழுத்தானவன் (சரவணபவ); தன்கைவேல்–தன்னுடைய கையிலுள்ள வேற்படை; நடுவில்–நடுவிடத்தை; காக்க–காத்தருள்க; சிகரமின்–தலையில் மின்னுகின்ற; தேவமோலி–தெய்வீகமுடி; திகழ்–விளங்குகின்ற; ஐ–தலைவனது; வேல்–வேற்படை; கீழ்மேல்–கீழிடம் மேலிடம் ஆகியவற்றை; காக்க–காத்தருள்க.

## கருத்துரை:

யகர எழுத்துப் போலுள்ள முத்தலைச் சூலத்தைத் தாங்கும் மணம்கமழ் தோளானின் வேற்படை என் முன் இடத்தைக் காத்தருள்க. பன்னிரு உயிர் எழுத்துக்கள் போன்று பன்னிரு கண்களையுடையவனின் வேற்படை என் பின் இடத்தைக் காத்தருள்க. சகரம் என்ற எழுத்தோடு சேர்த்து ஆறு எழுத்தாக உள்ளவன் (சரவணபவ எனும் திருவாறெழுத்து) கையிலுள்ள வேற்படை நடுவிடத்தைக் காத்தருள்க. தலையில் மின்னுகின்ற தெய்வீகமுடி திகழும் தலைவனது வேல் கீழிடம் மேலிடம் ஆகியவற்றைக் காத்தருள்க.

*ரஞ்சித மொழிதே வானை நாயகன் வள்ளி பங்கன்*
*செஞ்சய வேல்கி ழக்கிற் றிடமுடன் காக்க வங்கி*
*விஞ்சிடு திசையின் ஞான விரன்வேல் காக்க தெற்கில்*
*எஞ்சிடாக் கதிர்கா மத்தோ னிகலுடைக் கரவேல் காக்க* 24

பதவுரை :

ரஞ்சித மொழி–இனிய மொழியுடைய; தேவானை–தெய்வயானை; நாயகன்–கணவன்; வள்ளி பங்கன்–வள்ளியின் மணாளன்; செஞ்சய வேல்–சிறந்த வெற்றி வேல்; கிழக்கில்–கிழக்குத் திசையில்; திடமுடன்–வலிமையோடு; காக்க–காத்தருள்க; அங்கி–நெருப்பு; விஞ்சிடு–மிகுதியாகவுள்ள; திசையில்–தென் கிழக்குத் திசையில் (அக்கினி திசை); ஞானவீரன்–பேரறிவு மிகுந்தவன்; வேல்–வேற்படை; காக்க–காத்தருள்க; தெற்கில்–தெற்குத் திசையில்; எஞ்சிடா–குறை வில்லாத; கதிர்காமத்தோன்–கதிர்காமத்தில் எழுந்தருளியுள்ளவன்; இகல்உடை–வலிமையுடைய; கரம்–கையில் பிடித்த; வேல்–வேற்படை; காக்க–காத்தருள்க.

கருத்துரை :

இனிய மொழியுடைய தெய்வயானை, வள்ளியம்மையாரின் மணாளனின் சிறந்த வெற்றிவேல் (இந்திரதிசை) கிழக்குத் திசையில் வலிமையோடு காத்தருள்க. அக்கினி திசையான தென் கிழக்கில் பேரறிவுமிக்கவனின் வேற்படை காத்தருள்க. இயமன் திசை எனும் தெற்குத்திசையில் குறைவிலாத கதிர்காமக் கந்தனின் வலிமையுடைய கையிலுள்ள வேற்படை காத்தருள்க.

*லகரமே போற்கா ளிங்க னல்லுட னெளிய நின்று*
*தகரமர்த் தனமே செய்த சங்கரி மருகன் கைவேல்*
*நிகழெனை நிருதி திக்கி னிலைபெறக் காக்க மேற்கில்*
*இகலயில் காக்க வாயு வினிற்குகன் கதிர்வேல் காக்க.* 25

பதவுரை :

லகரமே போல்–லகர எழுத்தின் வடிவத்தைப் போல; காளிங்கன்–காளிங்கன் என்ற பெயருடைய பாம்பின்; அல்லுடல்–கரிய உடம்பு; நெளிய–நெளியும்படி; நின்று–மேலேறி; தகர–சிதைய; மர்த்தனமே செய்த–கடைதல் போல் வருத்திய; சங்கு அரி–சங்கு ஏந்திய திருமால்; மருகன்–மருமகன்; கைவேல்–கையிலுள்ள வேற்படை; நிகழ் எனை–இருக்கும் என்னை; நிருதி திக்கில்–தென்மேற்குத் திசையில்; நிலைபெற–அழியாமல்; காக்க–காத்தருள்க. மேற்கில்–மேற்குத் திசையில்; இகல் அயில்–பகையை வெல்லும் வேல்; காக்க–காத்தருள்க; வாயுவினில்–வடமேற்குத் திசையில்; குகன்–குகனது; கதிர்வேல்–சுடர்வேல்; காக்க–காத்தருள்க.

கருத்துரை :

லகர எழுத்தின் வடிவம் போல் காளிங்கன் என்ற பெயருடைய கரியபாம்பின் உடல் நெளிய நின்று, சிதையக்கடைந்த சங்கு ஏந்திய திருமாலின் மருமகனின் கையிலுள்ள வேற்படை, இருக்கும் என்னை தென்மேற்குத் திசையில் அழியாமல் காத்தருள்க. மேற்குத் திசையில் பகையை வெல்லும் வேல் காத்தருள்க. வடமேற்குத் திசையில் குகனது சுடர்வேல் காத்தருள்க.

*வடதிசை தன்னி லீசன் மகனருட் டிருவேல் காக்க*
*விடையுடையீசன் றிக்கில் வேதபோ தகன்வேல் காக்க*
*நடக்கையி லிருக்கு ஞான்று நவில்கையி னிமிர்கை யிற்கீழ்க்*
*கிடக்கையிற் றூங்கு ஞான்று கிரிதுளைத் துளவேல் காக்க.* 26

பதவுரை :

வடதிசை தன்னில்–வடக்குத் திசையில்(குபேரன் திசை); ஈசன் மகன்–சிவகுமாரன்; அருள் திருவேல்–அருள் நிறைந்த அழகிய வேற்படை; காக்க–காத்தருள்க; விடையுடை–எருதினையுடைய; ஈசன் திக்கில்–ஈசானர் திசையில் (வடகிழக்குத் திசைக் காவலர்);

வேதபோதகன்–(வேதம்+போதகன்) வேதத்தை விளக்கியுரைத்த ஆசிரியன்; வேல் –வேற்படை; காக்க–காத்தருள்க; நடக்கையில்–நடக்கும் போது; இருக்கு ஞான்று–அமர்ந்திருக்கும் போது; நவில்கையில்–பேசும்போது; நிமிர்கையில்–நிமிர்ந்து நிற்கும்போது; கீழ்க் கிடக்கையில்--கீழே படுத்திருக்கும்போது; தூங்கு ஞான்று–தூங்கும்போது; கிரி துளைத்துள–கிரௌஞ்ச மலையைத் துளைத்துள்ள; வேல்–வேற்படை; காக்க–காத்தருள்க.

## கருத்துரை :

குபேரன் திசை எனப்படும் வடக்குத் திசையில் சிவகுமாரனின் அருள்நிறைந்த அழகிய வேல் காத்தருள்க. வடகிழக்குத் திசைக் காவலரான ஈசானர் திசையில் சிவனுக்குப் பிரணவத்தை விளக்கியுரைத்த ஆசிரியனின் வேல் காத்தருள்க. நடக்கும் போதும், அமர்ந்திருக்கும்போதும், பேசும்போதும், நிமிர்ந்து நிற்கும்போதும், கீழே படுத்திருக்கும்போதும், தூங்கும்போதும், கிரௌஞ்ச மலையைத் துளைத்துள்ள வேல் காத்தருள்க.

*இழந்துபோ காத வாழ்வை யீயுமுத் தையனார் கைவேல்*
*வழங்குநல் லூணுண் போது மால்விளை யாட்டின் போதும்*
*பழஞ்சுரர் போற்றும் பாதம் பணிந்துநெஞ் சடக்கும் போதுஞ்*
*செழுங்குணத் தோடே காக்க திடமுடன் மயிலுங் காக்க.* 27

## பதவுரை :

முத்தையனார்–முத்தியளிப்பவர்; கை வேல்–கையிற் பிடித்த வேல்; இழந்து போகாத வாழ்வை ஈயும்–அழியாத பேரின்ப வாழ்வைக் கொடுக்கும்; வழங்கு–வழங்கப்படுகின்ற; நல்ஊண்–நல்ல உணவு; உண்போதும்–உண்ணும்போதும்; மால் விளையாட்டின்போதும்–காதல் மயக்கக் கேளிக்கையின் போதும்; பழம்சுரர்–பழைமையான தேவர்கள்; போற்றும்– தொழுகின்ற; பாதம்–திருவடிகளை; பணிந்து–தொழுது; நெஞ்சு அடக்கும் போதும்– மனஒருமைப் படுத்தும் போதும்; செழுங்குணத்தோடே–அருள்நிறைந்த குணத்துடன்; காக்க–காத்தருள்க; திடமுடன்–வலிமையுடன்; மயிலும்–மயில் வாகனமும்; காக்க–காத்தருள்க.

### கருத்துரை :

என்றும் அழிவில்லாத பேரின்ப வாழ்வை அளிக்கும் முத்தையனாரின் கையிலுள்ள வேல், வழங்கப்படும் நல்ல உணவை உண்ணும் போதும், காதல் மயக்கக் கேளிக்கையின் போதும், பழைமையான தேவர்கள் தொழும் திருவடிகளை வணங்கி மனத்தை ஒருமுகப்படுத்தும் போதும், அருள் நிறைந்த குணத்துடன் காத்தருள்க. வலிமையுடன் மயில் வாகனமும் காத்தருள்க.

முத்தியளிப்பவனாகையால் குமரனை முத்தையனார் என்று சுவாமிகள் குறித்துள்ளார்கள்.

*இளமையில் வாலி பத்தி லேறிடு வயோதி கத்தில்*
*வளர றுமுகச்சி வன்றான் வந்தெனைக் காக்க காக்க*
*ஒளியெழு காலை முன்னெ லோஞ்சிவ சாமி காக்க*
*தெளிநடு பிற்ப கற்கால் சிவகுரு நாதன் காக்க.* 28

### பதவுரை :

இளமையில்–இளமைப் பருவத்தில்; வாலிபத்தில்–வாலிபப் பருவத்தில்; ஏறிடு வயோதிகத்தில்–வயது முதிர்ந்து வரும் முதுமைப் பருவத்தில்; வளர்–உயிர்களை வளர்க்கும்; அறுமுகச் சிவன்தான்–ஆறுமுகத்தோடு வந்த சிவன்; வந்துஎனை–அந்தந்தப் பருவத்தில் என்னை நெருங்கி வந்து; காக்க காக்க– காத்தருள்க, காத்தருள்க; ஒளி எழு காலை–சூரியன் உதிக்கும் காலத்தில்; முன் எல்–முற்பகல்; ஓம்–ஓங்கார ரூபனான; சிவசாமி–சிவபெருமானுக்கு ஆசிரியன்; காக்க–காத்தருள்க; தெளி–தெளிவான; நடு–நடுப்பகலில்; பிற்பகல் கால்–பிற்பகலின் போது; சிவகுருநாதன்–சிவபெருமானுக்குக் குருநாதனாக விளங்கும் முருகன்; காக்க–காத்தருள்க.

### கருத்துரை :

இளமை, வாலிபம், முதுமை என்னும் ஒவ்வொரு பருவத்திலும் அறுமுகச்சிவன் அருகிருந்து காத்தருள்வானாக, காத்தருள்வானாக.

சூரியோதயத்திலும், முற்பகலிலும் ஓங்கார சொரூபனான சிவசாமி காத்தருள்க. தெளிவான நடுப்பகலிலும் பிற்பகலிலும் சிவகுருநாதன் காத்தருள்வானாக.

நமது வாழ்க்கையின் ஒவ்வொரு பருவத்திலும் துன்பம் வராமல் காக்க வேண்டுவதுடன் ஒவ்வொரு நாளிலும் வரும் பல வேளைகளிலும் துன்பம் வராமல், சுவாமிகள் காக்க வேண்டுகிறார்கள்.

*இறகுடைக் கோழித் தோகைக் கிறைமுனி ராவிற் காக்க*
*திறலுடைச் சூர்ப்ப கைத்தே திகழ்பினி ராவிற் காக்க*
*நறவுசேர் தாட்சி லம்ப னடுநிசி தனனிற் காக்க*
*மறைதொழு குழக னெங்கோன் மாறாது காக்க காக்க* 29

**பதவுரை :**

இறகுடை–இறக்கைகளையுடைய; கோழி–கோழிக்கும்; தோகை–மயிலுக்கும்; இறை–தலைவன்; முன் இராவில்–முன்னிரவில்; காக்க–காத்தருள்க; திறலுடை–வலிமயுடைய; சூர்–சூரபன்மனின்; பகை–பகைவரான; தே–இறைவன்; திகழ்–விளங்கும்; பின் இராவில்–பின்னிரவில்; காக்க–காத்தருள்க; நறவு–தேன்; சேர்–பொருந்திய; தாள்–திருவடிகளில்; சிலம்பன்–சிலம்பணிந்தவன்; நடுநிசி தன்னில்–நள்ளிரவில்; காக்க–காத்தருள்க; மறை தொழு–வேதங்கள் தொழுகின்ற; குகன்–(இளையோன்) குமரன்; எம்கோன்–எம் அரசன்; மாறாது–எப்போதும் மாறாமல்; காக்க, காக்க–காத்தருள்க,காத்தருள்க.

**கருத்துரை :**

இறக்கைகளையுடைய கோழிக்கும் அழகிய தோகையையுடைய மயிலுக்கும் தலைவன் முன் இரவில் காத்தருள்வானாக. வலிமையுடைய சூரபன்மனின் பகைவரான இறைவன் விளங்கும் பின் இரவில் காத்தருள்வானாக. தேன் சிந்தும் திருவடிகளில் சிலம்பணிந்தவன் நள்ளிரவில் காத்தருள்வானாக. வேதங்கள் தொழுகின்ற அழகுடைக் குமரனான எம் அரசன் என்றும் மாறாமல் காத்தருள்வானாக, காத்தருள்வானாக.

சுவாமிகள் இரவு முழுவதும் காக்கும்படி வேண்டியுள்ளார்கள்.

*இனமெனத் தொண்டரோடு மிணக்கிடுஞ் செட்டி காக்க*
*தனிமையிற் கூட்டந் தன்னிற் சரவண பவனார் காக்க*
*நனியனு பூதி சொன்ன நாதர்கோன் காக்க வித்தைக்*
*கனிவொடு சொன்ன தாசன் கடவுடான் காக்க வந்தே.* 30

**பதவுரை :**

இனம்என–தகுந்த உறவு என; தொண்டரோடும்–அடியார்களுடன்; இணக்கிடும்–கூட்டுவிக்கும்; செட்டி–செட்டியாக வந்த குமரன்; காக்க–காத்தருள்க; தனிமையில்–தனியே இருக்கும் போதும்; கூட்டந்தன்னில்–கூட்டத்திலிருக்கும்போதும்; சரவணபவனார்–சரவணபவன்; காக்க–காத்தருள்க; நனி–சிறந்த; அனுபூதி–கந்தரநுபூதி; சொன்ன–பாடியருளிய; நாதர்–அருணகிரிநாதருடைய; கோன்–அரசன்; காக்க–காத்தருள்க; இத்தை–இதை (சண்முக கவசத்தை); கனிவொடு–அன்போடு; சொன்ன–பாடியருளிய; தாசன்–குமரகுருதாசன்; கடவுள் தான்–கடவுளான அறுமுகன்; வந்தே–வந்து; காக்க–காத்தருள்க.

**கருத்துரை :**

தகுந்த உறவு என அடியார்களுடன் கூட்டுவிக்கும் செட்டிக் குமரன் காத்தருள்வானாக. தனியே இருக்கும்போதும், கூட்டத்தி லிருக்கும்போதும் சரவணபவன் காத்தருள்வானாக, சிறந்த கந்தரநுபூதி பாடியருளிய அருணகிரிநாதரின் அரசனான முருகன் காத்தருள்வானாக. இந்தச் சண்முக கவசத்தை அன்போடு பாடியருளிய பாம்பன் குமரகுருதாசரின் கடவுளான அறுமுகன் வந்து காத்தருள்வானாக.

வள்ளியம்மையை அடையக் குமரன் வளையல்காரச் செட்டியாக வந்தமையால் செட்டி என்று அழைக்கப்பட்டான் என்பர்.

திருச்சிற்றம்பலம்.

## ஆசிரியர் எழுதிய உரைநூல்கள்

1. சண்முக கவசம்
2. பஞ்சாமிர்த வண்ணம்
3. அட்டாட்ட விக்கிரகலிலை
4. நவவீரர் நவரத்தின கலிவிருத்தம்
5. குமாரஸ்தவம்
6 ஆறெழுத்துண்மை
7. ஸ்ரீ கதிர் காமவேலர் வண்ணம்
8. பகை கடிதல்
9. கழுகுமலை பாதி கந்தகிரிபாதி
10 கனவதிகாரம்
11. திருவான்மியூர்ப் பதிகம்
12. வேற்குழவி வேட்கை
13. பெருவேண்டுகோள்
14 சரணவிண்ணப்பம்
15. அசோக சாலவாசம்
16 பொன்மயிற் கண்ணி
17. அமரர்கோ
18. ஆதரிப்பாரெவர்
19. திருநெல்வேலிக் கோவில்
20 தௌத்தியம்
21. திருச்சீரலைவாய்ப் பதிகம்
22 திருப்பழநிப்பதிகம்
23. அடைக்கலம்
24. திருக்கந்தர் திருப்பல்லாண்டு
25. சரவணப் பொய்கைத் திருவிளையாடல்
26. திருக்கயிலாயத் திருவிளையாடல்
27. திருத்தொடையல்
28. பெரியசாமி
29. திருக்குமர கோட்டம்
30. சுப்பிரமணிய ரகசியம்
31. புவியாரே
32. போற்றி விண்ணப்பம்
33. பாம்பன் ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்
34. பரிபூரணானந்த போதம் (ஆய்வு நூல்)
35. தமிழ் இலக்கிய வரலாறு (உரைநடை)
36. திருப்பழநி மலைப்பதிகம் I
37. திருப்பழநி மலைப்பதிகம் II
38. பயன்தரும் பதிகங்கள் (தொகுப்பு)
39. பயன் பதிகங்கள் (தொகுப்பு)
40. பாராயணத் திரட்டு (தொகுப்பு)
41. குந்துகால்
42. செவியறி வுறூஉ (எளிய தமிழ் நடை–ஆதிக்கம்)

உ

முருகா

# திருப்புகழ் அஷ்டோத்தர சத திவ்விய நாமாவளி:

ஓம் உம்பர்கள் ஸ்வாமீ நமோநம:
ஓம் எம்பெருமானே நமோநம:
ஓம் ஒண்டொடி மோகா நமோநம:
ஓம் நாத விந்து கலாதீ நமோநம:
ஓம் வேதமந்த்ர சொரூபா நமோநம:
ஓம் ஞானபண்டித ஸ்வாமீ நமோநம:
ஓம் வெகுகோடி நாம சம்புகுமாரா நமோநம:
ஓம் போக அந்தரி பாலா நமோநம:
ஓம் நாக பந்த மயூரா நமோநம:
ஓம் பரசூரர் சேததண்ட விநோதா நமோநம: 10
ஓம் கீத கிண்கிணி பாதா நமோநம:
ஓம் தீர சம்ப்ரம வீரா நமோநம:
ஓம் கிரிராஜ தீபமங்கல ஜோதீ நமோநம:
ஓம் தூய அம்பல லீலா நமோநம:
ஓம் தேவ குஞ்சரி பாகா நமோநம:
ஓம் போதகந் தரு கோவே நமோநம:
ஓம் நீதி தங்கிய தேவா நமோநம:
ஓம் பூதலந் தனை ஆள்வாய் நமோநம:
ஓம் பணியாவும் பூணுகின்ற பிரானே நமோநம:
ஓம் வேடர் தங்கொடி மாலா நமோநம: 20
ஓம் போதவன் புகழ் ஸ்வாமீ நமோநம:
ஓம் அரிதான வேத மந்திர ரூபா நமோநம:
ஓம் ஞான பண்டித நாதா நமோநம:
ஓம் வீரகண்டைகொள் தாளா நமோநம:

ஓம் அழகானமேனி தங்கிய வேளே நமோநம:
ஓம் வான பைந்தொடி வாழ்வே நமோநம:
ஓம் வீறுகொண்ட விசாகா நமோநம:
ஓம் சத்தி பாணீ நமோநம:
ஓம் முத்தி ஞானீ நமோநம:
ஓம் தத்வ ஆதி நமோநம: 30
ஓம் விந்துநாத சத்துரூபா நமோநம:
ஓம் ரத்த தீபா நமோநம:
ஓம் தற் ப்ரதாபா நமோநம:
ஓம் சரவண ஜாதா நமோநம:
ஓம் கருணைய தீதா நமோநம:
ஓம் சத்தன பாதா நமோநம:
ஓம் அபிராம தருண கதீரா நமோநம:
ஓம் நிருபமர் வீரா நமோநம:
ஓம் சமதள வூரா நமோநம:
ஓம் ஜகதீச பரமசொரூபா நமோநம: 40
ஓம் சுரர்பதி பூபா நமோநம:
ஓம் பரிமள நீபா நமோநம:
ஓம் உமைகாளி பகவதி பாலா நமோநம:
ஓம் இகபர மூலா நமோநம:
ஓம் பவுருஷ சீலா நமோநம:
ஓம் சிவசிவ ஹரஹர தேவா நமோநம:
ஓம் தெரிசன பரகதி யானாய் நமோநம:
ஓம் திசையினும் இசையினும் வாழ்வே நமோநம:
ஓம் செஞ்சொல் சேரும் திருதரு கலவி மணாளா நமோநம:
ஓம் திரிபுர மெரிசெய்த கோவே நமோநம: 50
ஓம் சீதள வாரிஜ பாதா நமோநம:
ஓம் நாரத கீத விநோதா நமோநம:
ஓம் சேவல மாமயில் ப்ரீதா நமோநம:

ஓம் மறை தேடுஞ் சேகரமான ப்ரதாபா நமோநம:
ஓம் ஆகம சார சொரூபா நமோநம:
ஓம் தேவர்கள் சேனை மகீபா நமோநம:
ஓம் கதி தோயப் பாதகநீவு குடாரா நமோநம:
ஓம் மாவசுரேச கடோரா நமோநம:
ஓம் பாரினிலே ஜெயவீரா நமோநம:
ஓம் மலைமாது பார்வதியால் தரு பாலா நமோநம: 60
ஓம் நாவல ஞான மனோலா நமோநம:
ஓம் பாலகுமார ஸ்வாமீ நமோநம:
ஓம் சிங்கார ரூபமயில் வாகன நமோநம:
ஓம் கந்தா குமார சிவதேசிக நமோநம:
ஓம் சிந்தூர பார்வதி சுதாகர நமோநம:
ஓம் விருதோதை சிந்தான சோதி கதிர்வேலவ நமோநம:
ஓம் கங்காள வேணிகுரு வானவ நமோநம:
ஓம் அரிமருகோனே நமோநம:
ஓம் அறுதியிலானே நமோநம:
ஓம் அறுமுக வேளே நமோநம: 70
ஓம் உன்பாதம் அரகர சேயே நமோநம:
ஓம் இமையவர் வாழ்வே நமோநம:
ஓம் அருண சொரூபா நமோநம:
ஓம் போத நிர்க்குண போதா நமோநம:
ஓம் நாத நிஷ்கள நாதா நமோநம:
ஓம் பூரணக்கலை சாரா நமோநம:
ஓம் பஞ்சபாண பூபன் மைத்துனபூபா நமோநம:
ஓம் நீப புஷ்பக தாளா நமோநம:
ஓம் போக சொர்க்க புபாலா நமோநம:
ஓம் சங்கமேறும் மாதமிழ்த்ரய சேயே நமோநம: 80
ஓம் வேதனத்ரய வேளே நமோநம:
ஓம் வாழ் ஜகத்ரய வாழ்வே நமோநம:

ஓம் வேத வித்தகா ஸ்வாமீ நமோநம:
ஓம் வேல் மிகுத்த மாசூரா நமோநம:
ஓம் வீம சக்ர யூகளா நமோநம:
ஓம் விந்து நாத வீரபத்ம சீர்பாதா நமோநம:
ஓம் நீலமிக்க கூதாளா நமோநம:
ஓம் மேகமொத்த மாயூரா நமோநம:
ஓம் விண்டிடாத போத மொத்தபேர் போதா நமோநம: 90
ஓம் பூதமற்றுமே யானாய் நமோநம:
ஓம் பூரணத்துளே வாழ்வாய் நமோநம:
ஓம் துங்கமேவும் பூதரத்தெலாம் வாழ்வாய் நமோநம:
ஓம் ஆறிரட்டி நீள் தோளா நமோநம:
ஓம் பூஷணத்து மா மார்பா நமோநம:
ஓம் ஆர்யை பெற்ற சீராளா நமோநம:
ஓம் சூரையட்டு நீள் பேரா நமோநம:
ஓம் ஆரணத்தினார் வாழ்வே நமோநம:
ஓம் ஆதி சற்குண சீலா நமோநம:
ஓம் ஆடகத்திரி சூலா நமோநம:
ஓம் ஆதரித்தருள் பாலா நமோநம:
ஓம் ஆனவர்க் கினியானே நமோநம:
ஓம் ஞாந முத்தமிழ் தேனே நமோநம:
ஓம் ஆரணற்கு அரியானே நமோநம:
ஓம் தோதி தித்திமி தீதா நமோநம:
ஓம் வேத சித்திர ரூபா நமோநம:
ஓம் சோப மற்றவர் ஸ்வாமீ நமோநம:
ஓம் தூதனைத்துகை பாதா நமோநம:
ஓம் நாத சற்குருநாதா நமோநம: 108

**நானாவித மந்த்ர பரிமள பத்திர**
**புஷ்பாணி சமர்ப் பயாமி.**



ஸ்ரீ முத்துக்குமார ஸ்வாமி (கந்த கோட்டம்)